REGD. No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு



**பலம்**

எவ்வளவு நியாயமான இலட்சியமும் பலத்துடன் கூடி இருந்தாலொழிய வெற்றி பெற முடியாது.

பேரறிஞர் அண்ணா


# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்


**மனிதன்**

மனிதன் எத்தனையோ முறை ஓயாமல் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்கிறான். விலக்க வேண்டியவைகளை மற்றவர்களுக்கு மகிழ்வூட்டுவதற்காக மேலும் மேலும் செய்கிறான்.

மலர்: 3 (●) சென்னை 22—5—1979 செவ்வாய் (★)❋●❋(★) வெளியூர் 23—5—1979 புதன் (●) இதழ்: 213

## தஞ்சை-நாகை நாடாளுமன்ற தேர்தல் பணிகள்

நாகப்பட்டினம் நாடாளுமன்ற தொகுதியிலும், தஞ்சை நாடாளுமன்றத் தொகுதியிலும் செயல்வீரர்களின் கூட்டம் நடைபெற விருக்கிறது.

சட்டமன்ற தொகுதி வாரியாக செயல் வீரர்கள் கூட்டம் நடைபெறும்.

கூட்டங்களுக்கு மாண்புமிகு அமைச்சர் எஸ். டி. எஸ். அவர்கள் வருகை தந்து தேர்தல் பற்றியும்-நம்முடைய கழகத் தோழர்களின் ஆக்கப்பணிகள் பற்றியும் கலந்துரையாட இருக்கிறார்கள்.

ஒன்றிய அமைப்பாளர்கள் கீழே உள்ள விவரப்படி செயல்வீரர்கள் கூட்டத்தை தொகுதிகளில் கூட்டுமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

இடத்தையும் நேரத்தையும் ஒன்றிய அமைப்பாளர்களே செயல்வீரர்களுக்கு தெரிவித்து கூட்டத்தைக் கூட்ட வேண்டுமாய்க் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

25-5-79 வெள்ளிக்கிழமை காலை.
வேதாரணியம் சட்டமன்ற தொகுதி
25-5-79 வெள்ளிக்கிழமை மாலை.
திருத்துறைப்பூண்டி சட்டமன்ற தொகுதி
26-5-79 சனிக்கிழமை காலை.
திருவாரூர் சட்டமன்ற தொகுதி
26-5-79 சனிக்கிழமை மாலை.
மன்னார்குடி சட்டமன்ற தொகுதி
27-5-79 ஞாயிற்றுக்கிழமை காலை
ஒரத்தநாடு- திருவோணம் சட்டமன்ற தொகுதிகளின் கூட்டங்கள் ஒரே இடத்தில் ஒரத்தநாட்டில் நடைபெற வேண்டும்.
27-5-79 ஞாயிற்றுக்கிழமை மாலை 4 மணி
பாபநாசம் சட்டமன்ற தொகுதி
27-5-79- ஞாயிறு இரவு 7 மணி
வலங்கைமான் சட்டமன்ற தொகுதி
28-5-79 திங்கட்கிழமை காலை
நாகை சட்டமன்ற தொகுதி
28-5-79 திங்கட்கிழமை மாலை
நன்னிலம் சட்டமன்ற தொகுதி
29-5-79 செவ்வாய்க்கிழமை காலை
திருவையாறு சட்ட மன்ற தொகுதி
29-5-79 செவ்வாய்க்கிழமை மாலை
தஞ்சாவூர் சட்டமன்ற தொகுதி

இந்த விவரப்படி செயல் வீரர்களின் கூட்டங்கள் கூட்டப்பட வேண்டும் என்று ஒன்றியஅமைப்பாளர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

**துரை. கோவிந்தராசன்**
**கோவி. நாராயணசாமி**
மாவட்ட அமைப்பாளர்கள்
அனைத்திந்திய அண்ணா தி.மு.க.

★ கோதுமை சாகுபடியாளர்களுக்கு ஒரு நீதி-தமிழக விவசாயிகளுக்கு ஒரு நீதியா?

★ விவசாயிகளுக்கு கட்டுப்படி ஆகும் வகையில் ரூ. 129 ஆக

# நெல் விலையை உயர்த்துவீர்

## டெல்லியில் அமைச்சர் எட்மண்ட் வற்புறுத்தல்

**புதுடெல்லி, மே 22--நெல் கொள்முதல் விலையை குவிண்டாலுக்கு ரூ.129ஆக நிர்ணயிக்கவேண்டும் என்று டெல்லியில் அமைச்சர் எட்மண்ட் வற்புறுத்தினர். உடனடியாக இது முடியாவிட்டாலும் கோதுமைக்கு கொடுப்பது போல் 115 ரூபாயாகவாவது விலை நிர்ணயிக்க வேண்டும் என்று அமைச்சர் எட்மண்ட் குறிப்பிட்டார்.**

நெல் கொள்முதல் விலை சம்பந்தமாக மத்திய விவசாய அமைச்சர் சுர்ஜித்சிங் பர்னலாவுடன் மாநில முதல்வர்கள் உணவு அமைச்சர்கள், உயர் அதிகாரிகள் கூடிப் பேசினர்.

விவசாய விளைபொருள் விலை நிர்ணயக்குழு நெல்லுக்கு குவிண்டால் 90 ரூபாயாகவும், புஞ்சைத் தானியங்களுக்கு 85 ரூபாயாகவும் விலை நிர்ணயம் செய்திருந்தது.

அந்தக்கூட்டத்தில் இந்த விலையை ஜம்மு காஷ்மீர், இமாச்சல் பிரதேசம், கோவா, மேற்குவங்காளம் போன்ற நெல் விளைச்சல் அதிகமற்ற மாநிலங்கள் மட்டுமே ஏற்றுக்கொண்டன.

நெல் கொள்முதல் விலையை மேலும் உயர்த்த வேண்டும் என்று மற்ற மாநிலங்கள் எல்லாம் வலியுறுத்தின.

இந்த ஆலோசனைக் கூட்டத்தில் கேரளம், கருநாடகம் ஆகிய மாநிலங்கள் தவிர எல்லா மாநிலப் பிரதிநிதிகளும் கலந்து கொண்டனர்.

### எட்மண்ட்

தமிழக உணவு அமைச்சர் எட்மண்ட் இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டு நெல் விலையை உயர்த்த வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தினர்.

நெல்கொள்முதல்விலையை ரூ. 129 ஆக நிர்ணயிக்க வேண்டும். நிதிநிலைமை காரணங்களால் அது உடனடியாக முடியாதுஎன்றால் கோதுமைக்குக்கொடுப்பது போல் 115 ரூபாய் என்று நெல்கொள்முதல் விலையை நிர்ணயிக்க வேண்டும் என்று அமைச்சர் எட்மண்ட் வற்புறுத்தினர்.

### அதிருப்தி

சாகுபடிச் செலவைக் கணக்கிட்டு கோதுமைக்கு விலை நிர்ணயிக்கிறார்கள். ஆனல் நெல் கொள்முதல் விலையை நிர்ணயிப்பதில் வேறு மாதிரி நிலைமை மேற்கொள்ளப்படுகிறது. இந்த பாரபட்சம் தமிழ் மக்களுக்கு அதிருப்தி அளித்துள்ளது என்றும் அமைச்சர் எட்மண்ட்குறிப்பிட்டார்,

அவர் மேலும் கூறியதாவது:-

தமிழ்நாட்டில் நெல்சாகுபடிக்கு ஏற்படும் செலவு ரூ. 117 முதல் ரூ. 124 வரை உள்ளது. தமிழ்நாடு விவசாயப் பல்கலைக் கழகம், விவசாய இலாகா ஆகியவை நடத்திய கணக்கெடுப்பில் இந்த விவரம்தெரியவந்துள்ளது.

விவசாயிகள்நலனுக்கான பரிந்துரைகள் கொடுக்க தமிழக அரசு நியமித்த உயர்மட்டக் குழுவில் சம்பந்தப்பட்ட விவசாயிகள் பிரதிநிதிகளும் இதைத் தெரிவித்துள்ளனர்.

இந்தப் புள்ளி விவரக் கணக்கு மிகவும் நம்பகரமானது.

ஆனல் மத்திய அரசின் விவசாய விளை பொருள் விலை நிர்ணயக்குழு, நெல் சாகுபடிக்கு ஆகும் செலவு பற்றி என்ன கூறுகிறது. தமிழ்நாட்டில் 1974-75ல் நெல் சாகுபடி செலவு ரூ. 91. 43 என்றும் 1975 - 76ல் ரூ. 97.47 என்றும் 1976 - 77ல் ரூ. 90.79 என்றும் அந்தக் குழு கூறுகிறது.

இதில் எவ்வளவு முரண்பாடுகள் உள்ளன. ஒரு ஆண்டைக் காட்டிலும் அடுத்த ஆண்டு ரூ. 23 குறைந்ததாகவும் பிறகு அடுத்த ஆண்டில் பழைய அளவுக்கே செலவுகள் கூடியதாகவும் மத்திய அரசு குழு கணக்கிடுகிறது.

இப்படிப்பட்ட கணக்கின் அடிப்படையில்தான் மத்திய அரசு குழு நெல் விலையை நிர்ணயிக்கிறது. இது சரியான கணக்கு அல்ல.

அந்த குழு 1976-77ல் சாகுபடி செலவு எவ்வளவு என்று கணக்கிடாமல் விலை நிர்ணயித்துள்ளது. குழுவின் கணக்குப்படி பார்த்தாலும் விலை எப்படியும் ரூ. 130 ஆக இருக்க வேண்டும்.

சாகுபடிச் செலவு ரூ. 90 என்று கணக்கிட்டாலும்



கொள்முதல்விலைரூ105ஆக நிர்ணயிக்க வேண்டும். கோதுமைக்கு இதே போல் 15 ரூபாய் இடைவெளி விடுகிறீர்கள், அந்த அளவு

(2-ம் பக்கம் பார்க்க)

## கருணாநிதியின் பச்சைத் துரோகத்துக்கு இதோ ஒரு 'சாம்பிள்'

தன்னிடம் இல்லாத குணாதிசயங்களை இருப்பதாக மேடைகளில் பேசி தன் முதுகில் தானே தட்டிக்கொடுத்துக் கொள்வது கோபாலபுரத்தாருக்கு கைவந்த கலை.

இவர் நட்பில் உறுதியாக இருப்பாராம். பகை என்று வந்தால் அதிலேயும் உறுதியாக இருப்பாராம்.

இதோ அவருடைய 'நட்புக்கு' ஒரு சாம்பிள்.

இந்தியாவின்வரலாற்றிலேயே நாட்டுக்கு ஏற்பட்ட மிகப் பெரிய சோதனை வங்க தேசப் போர்!

பாகிஸ்தானுக்கு ஆதரவாக அமெரிக்காவின் வல்லமைமிக்க 7-வது கடற்படை வங்கக் கடலுக்கு வந்துவிட்டது!

மறுபுறம் அமெரிக்கா தனது வாயை அகலத் திறந்து வைத்துக் கொண்டு இந்தியாவை கபளீகரம் செய்யக் காத்திருக்கிறது. அந்த நேரத்தில் கருணாநிதி அமெரிக்காவில் ராஜோபசாரங்களைப் பெற்றுக்கொண்டு நாடு திரும்புகிறார்!

**போர் உக்கிரமாக நடக்கும் வேளை- இந்தக் கருணாநிதி என்னசெய்தார்? மாநிலசுயாட்சிஎன்றுமுழக்கமிட்டார்**

ஒன்றாக இருந்த இந்தியா இரண்டாகியது...இரண்டு மூன்றாகியது.... அதற்குமேல் சொல்லமாட்டேன்.... என்று எதிரியை எதிர்த்து போராடிக் கொண்டிருந்த நேரத்தில் மறைமுகமாக பிரிவினை 'நெடி' வீசும் பிரச்சாரத்தை முடுக்கிவிட்டார்.

முஜிபுர் ரகிமான் முதலில் கேட்டது சுயாட்சி! அது மறுக்கப்பட்ட காரணத்தால் வங்க தேசம் சுதந்திரமே கேட்கிறது- இதை டெல்லி மறக்கக் கூடாது என்று அரசு செலவில் நடைபெற்ற விழாவில் கூட கருணாநிதி பேசி அதன்மூலம் இந்தியாவின் போர் முயற்சிகளுக்கு குந்தகம் ஏற்படுத்தினர்.

இந்தியாவின் இடுப்பை ஒடிக்கும் கருணாநிதியின் இந்தப் பிரச்சாரம் அப்போது பாகிஸ்தான் ரேடியோவில் மிகப் பிரமாதமாக ஒலிபரப்பப்பட்டது!

மத்திய அரசுக்கு அல்ல. பெற்ற பொன்னாட்டுக்கே ஆபத்து ஏற்பட்டபோது இந்தியாவின் ஒன்றுபட்ட யுத்த முயற்சிகளையே மலிவுபடுத்தும் வகையில் பேசியவர் கருணாநிதி.

சாதாரணக் கருணாநிதி அல்ல - முதலமைச்சர் பதவியில் வீற்றிருந்த கருணாநிதி -

நெருக்கடியான நேரத்தில் நாட்டுக்கே விசுவாசமாக இருப்பதற்கு மறுத்தவர் கருணாநிதி என்கிற இந்த வரலாற்றுப் பேருண்மை கல்லின் மேல் பொறித்த வாசகம்! கருணாநிதியின்இன்றைய சுயபிரதாபங்கள் நீர் மேல் எழுத்துக்கள்!

**காலம் இதற்கு பதில்கூறும்.**

## சர்க்கரை ஆலை ஊழியருக்கு ஊதிய உயர்வு

### தொழிலாளர்கள் மகிழ்ச்சி

**சென்னை, மே 22- இந்தியாவிலேயே வேறு எந்த மாநிலத்திலும் இல்லாத வகையில் தமிழகச் சர்க்கரை ஆலை ஊழியர்களுக்கு அதிக சம்பளம் அளிக்க கழக அரசு முடிவினை வெளியிட்டுள்ளது.**

**இந்த இனிக்கும் செய்தி தொழிலாளர் உள்ளமெல்லாம் கருப்பஞ்சாறாய் சர்க்கரைப் பாகாய்- மகிழ்ச்சியைத் தந்துள்ளது.**

தொழிற்சங்கங்கள்எழுப்பிய கோரிக்கைகள்குறித்து தொழிலாளர் நல அமைச்சர்ராகவானந்தம்முன்னிலையிலும் நிர்வாகத்தினருடனும்அனைத்து தொழிற் சங்கப்பிரதிநிதிகளுடனும்பேச்சு வார்த்தை நடைபெற்றது. நிர்வாகதரப்பில் சர்க்கரை தொழிலில் உள்ளமந்தநிலையாலும் தமிழகத்தில் மட்டுமே அதிக ஊதியம் வழங்குவதாலும் தொழிலாளர் கோரிக்கை எதையும் ஏற்கமுடியாது என்று கூறினர்.

தொழிலாளர் தரப்பில் மற்ற மாநிலங்களில் கொடுத்தது போல அல்லாமல் ஊதிய விகிதங்களையும் பஞ்சப்படிகளையும் மற்ற சலுகைகளையும் முழுமையாக மாற்றி அமைக்க வேண்டும் என்று கோரப்பட்டது.

இறுதியில் இருசாராருக்கும் உடன்பாடு ஏற்படாததால் சர்க்கரை ஆலைத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்வதாக அறிவித்திருந்தனர்,

வேலைநிறுத்தம் செய்தால் 1.5லட்சம் கரும்பு விவசாயிகள் பாதிக்கப்படுவார்கள் என்பதை கருத்தில் கொண்டு மற்ற மாநிலங்களில் கொடுக்கப்பட்டுள்ள ஊதிய உயர்வு அடிப்படையில் கீழ்க்கண்டபடி அரசு ஆலோசனை வழங்குகிறது.

1. எப்போதும் போல் தமிழகத்திலுள்ள சர்க்கரை ஆலைகளில் வேலை செய்யும் ஊழியர்களின் ஊதியம் இந்தியாவிலேயே மிக அதிகமாக இருக்க வேண்டும்.

2. மற்ற மாநிலங்களில் உள்ள தொழிலாளர்கள் பெறும் ஊதிய உயர்வுக்கு ஒப்பிடத்தக்க அளவில்

(2-ம் பக்கம் பார்க்க)

## நாகை கழக வேட்பாளர் நாளை வேட்புமனு தாக்கல்

சென்னை, மே 22- நாகை நாடாளுமன்ற தொகுதியில் கழக வேட்பாளராக போட்டியிடும் மா. மகாலிங்கம் 23ந் தேதியன்று காலை தஞ்சையில் வேட்பு மனு தாக்கல் செய்கிறார்.

தஞ்சை நாகை நாடாளுமன்ற இடைத் தேர்தல் குறித்து முடிவு எடுக்க தலைமைச் செயற்குழுவால் நியமிக்கப்பட்ட தேர்தல் ஆய்வுக்குழுவின் கூட்டம் திங்கள் இரவு சென்னையில் நடைபெற்றது.

முதல்வர் புரட்சித்தலைவர், கழக பொதுச் செயலாளர் டாக்டர் நாவலர் மற்றும்

(2-ம் பக்கம் பார்க்க)



## விவசாயக் குழு அறிக்கை: அமைச்சரவை ஆலோசனை

சென்னை, மே 22-விவசாய உயர்மட்டக் குழு அறிக்கை பற்றி தமிழக அமைச்சரவை இன்று விவாதித்தது.

தமிழக அமைச்சரவைக் கூட்டம் இன்று காலை முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் கூடியது.

தமிழக அரசு நியமித்த விவசாயிகள் உயர் மட்டக்குழு அறிக்கையைஅமைச்சரவைவிவாதித்தது. உயர் மட்டக்குழுவின் பரிந்துரைகள் பற்றி அமைச்சரவை இன்றுமுடிவு எடுக்கக்கூடும்,

டெல்லி இரட்டை கொலை:

## பில்லா அப்பீல் ஜூலை 9ல் விசாரணை

புதுடெல்லி, மே, 22-டெல்லியைச் சேர்ந்த கப்பல் படை அதிகாரி சோப்ராவின் மகள் கீதா (வயது 17); மகன் சஞ்சய் (வயது 15) இருவரையும் காரில் கடத்திச் சென்று கொலை செய்ததாக பில்லாவுக்கும் ரங்காவுக்கும் தூக்கு தண்டனை விதித்துதீர்ப்புகூறப்பட்டது

தண்டனையை எதிர்த்து இருவரும் அப்பீல் செய்திருக்கிறார்கள்.

டெல்லி ஐகோர்ட்டிப் கோடை விடுமுறைக்குள் பிறகு ஜூலை 9ந்தேதி வழக்கு விசாரணைக்கு எடுத்துகொள்ளப்படுகிறது

## சிறுவர் இலக்கிய தொண்டு ஆற்றிய இருவருக்கு பாராட்டு

செங்கற்பட்டு, மே. 22- அனைத்து நாட்டுக்குழந்தைகள் ஆண்டினையொட்டி தமிழில் சிறந்த சிறுவர் இலக்கியத் தொண்டாற்றி வரும் இருவருக்கான பாராட்டு விழா, செங்கற்பட்டிலுள்ள நித்திய கலா மன்றத்தின் சார்பில் நடந்தது.

அருணோதயம் பதிப்பக உரிமையாளர் அருணன் 'ராணி' பத்திரிகைஆசிரியர் அ. மா. சாமி இருவரும் பாராட்டப்பட்டார்கள். இவ்விழாவிற்குப் பிரபல எழுத்தாளர் திருமதி லட்சுமி தலைமை தாங்கினர்.

'தினமணிகதிர்' ஆசிரியர் கே. ஆர். வாசுதேவன். சிலம்பொலி செல்லப்பன், எழுத்தாளர் து.மிலன், கலைஞன் பதிப்பக உரிமையாளர் மாசிலாமணி ஆகியோரும் பங்கேற்றுப் பாராட்டுரை வழங்கினர்கள்.

அருணன், அ.மா. சாமி இருவருக்கும் விழாக் குழுவின் சார்பில்பொன்னாடை போர்த்தி, சிறந்த குழந்தை இலக்கியச் சேவை புரிந்தமைக்காகச் சிறப்பு விருது அளிக்கப்பட்டது.

சி.எஸ். கிருஷ்ணமூர்த்தி நன்றியுரை ஆற்றினர். விழா முடிவில் 'கீதா உபதேசம்' நாடகம் நடைபெற்றது.

# அமைச்சர் சவுந்தரராசன் தாக்கு...

(4-ஆம் பக்கத் தொடர்ச்சி)

தானே பாவை பாடுவாய் நாங்களே உனக்கொரு பாவை பாடுகிறோம் என்று தோல்வியடையச் செய்து விட்டனர்.

### அரசியல் நொண்டி

நான்காவதாக பாண்டி தேர்தலில் வெற்றி எனக்கு தான் என்று சொல்லி மக்களிடம்சென்றுபாண்டியை எனக்குதாருங்கள் என்றார் கருணாநிதி. ஆனால் மக்களோ உனக்கு பாண்டி தேவையில்லை. நீ அரசியலிலிருந்து ஓட வேண்டிய நொண்டி என்று விரட்டி அடித்து விட்டனர்.

ஐந்தாவதாக நாடாளுமன்றத் தேர்தலில்போட்டியிட்டார். கருணாநிதியின் கட்சிக்குஒருஇடத்தைதான் மக்கள்தந்தார்கள். அவர்கூட இந்த மண்ணில்- தமிழகத்தில் கருணாநிதியின் கொடுமைகளைத் தாங்கமுடியாது என்றுதானோ என்னவோ அந்தமானில் போய்மறைந்தார்.

ஆறாவதாக புரட்சித் தலைவர் முதல்வராக முடியாது - முதல்வராகமாட்டார். என்றெல்லாம் கருணாநிதி பிதற்றினர். ஆனால் புரட்சித் தலைவர் முதல்வராகி இரண்டு வருட காலமாக ஆட்சி செய்து வருகிறார்.

ஏழாவதாக புரட்சித் தலைவருக்கு பதில் சொல்லத் தெரியாது என்றார். சட்டமன்றத்திற்கு உள்ளே தரப்படும் பதில்களை கண்டு கருணாநிதி வாயடைத்துப் போயிருக்கிறார்.

அதனால்தான் வெளியே வந்து தடுமாறுகிறார். ஏன் இந்தத் நடுமாற்றம்?

இத்தனையும் மீறி கருணாநிதி பேசிக்கொண்டிருப்பதற்கு காரணம் ஜனநாயகம்தான்.

தூத்துக்குடியில் நடைபெற்ற மேதின விழா ஊர்வலத்தில் பல்லாயிரக்கணக்கான மக்கள்கலந்துகொண்டனர்.

### தி. மு. க. வன்முறை

ஊர்வலத்தில் புகுந்து தி. மு. க, வினர் செய்த கலவரத்தினால் இரண்டு தோழர்கள் மிகப்பயங்கரமான நிலையில்- ஆபத்தான நிலையில் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

இன்று காலை கூட அவர்களை மருத்துவமனையில் சென்று பார்த்துவிட்டுத் தான் வந்தேன்.

ஒருவரின் உயிர் ஊசலாடுகிறது. அப்போது கூட அவர் ''புரட்சித்தலைவரைக் காப்பேன்'' என்று தான் சொல்லிக் கொண்டிருக்கிறார்.

கருணாநிதியைக் கண்டு நாகைமக்கள் நகைக்கப்போகிறார்கள். தஞ்சைத் தரணியில் புரட்சித்தலைவர் பரணிபாடப்போகிறார்.

எங்களிடம் பணமில்லை, உழைப்பு இருக்கிறது. அந்த உழைப்பால் நாங்கள் வெற்றிபெறுவோம்.

புரட்சித்தலைவர்வெட்டிக் கொண்டு வா என்றால் கட்டிக் கொண்டு வரும் ஆற்றல் படைத்தவர்கள் எங்கள் தோழர்கள்.

### வினை விதைத்தவன்

வினைவிதைத்தவன் வினை அறுப்பான், தினை விதைத்தவன் தினை அறுப்பான் என்பார்கள்.

புரட்சித்தலைவர் தினை விதைத்தார்; தினை அறுக்கிறார். கருணாநிதி வினையை அறுக்கிறார்,

கழகத் தோழர்கள் மலர் படுக்கையில் படுத்தவர்களல்ல; கழகம் துவக்கப்பட்ட நாட்களிலிருந்துமுள் படுக்கையில் படுத்துக் கொண்டிருப்பவர்கள் நாங்கள்.

பதவியாசை கொண்ட தன்னலவாதிகள் புரட்சித் தலைவர் பின்னால் இல்லை.

புரூட்டஸ் கருணாநிதி பிணத்துக்காக ஆசைப்படுகிறார் என்றால் மன்றத் தோழர்கள்தங்களையே தர தயாராக இருக்கிறார்கள்.

### உயிர் பலிக்கு தயார்

பகாசுரன் கிராமத்தின் பக்கமே வரக்கூடாது என்பதற்காக அந்த மக்கள் தினமும் உணவும் ஒரு உயிரும் தந்தார்கள் என்று சொல்வதுண்டு. அது போல கருணாநிதிக்கு பிணம் தேவையென்றால் மன்றத்தோழர்கள் தங்களையே தருவதற்கு தயார்.

ஒன்றை மட்டும் அவர்கள் நினைவில் கொள்ள வேண்டும். புரட்சித் தலைவரின் மீது கை வைக்கலாம் என்று மட்டும் நினைக்காதீர்.

புரட்சித் தலைவர் மீது தூசி படுமானால் தமிழகம் தாங்காது.

### அன்பின் அடக்கம்

தஞ்சைக்கு வருவார்கள், அங்கே புரட்சித்தலைவரை பார்த்துக் கொள்ளலாம் என்று நினைக்க வேண்டாம். அவரை ஆட்டவும் அசைக்கவும் முடியாது.

நம்மால் வளர்ந்தவர்கள் நம்மையே ஆழம் பார்க்கிறார்கள். தீட்டிய மரத்திலேயே கூர்பார்க்கிறார்கள். வளர்த்த கடா மார்பிலே பாய்கிறது.

இந்த மார்பு பல வடுக்களைக் கண்டது.

எங்கள் நெஞ்சிலிருந்து வடியும் குருதிகூட ''எம். ஜி. ஆர்...எம்.ஜி.ஆர்...'' என் றுதான் துடிக்கும்.

கருணாநிதியைப் போல கீழ் மட்டத் தொண்டனை கட்டுப்படுத்த முடியவில்லை என்று சொல்லும் தலைவர் அல்ல எங்கள் புரட்சித் தலைவர்.

புரட்சித்தலைவர் பார்வையே எங்களை அடக்கிவிடும். அது பயத்தால் அல்ல, அன்பினால் தான்.

இவ்வாறு அமைச்சர் சவுந்தரராசன் பேசினர்.

### சோடா பாட்டில் வீச்சு

தம்புச்செட்டித்தெருவில் பொதுக்கூட்டம் நடை பெற்ற இடத்துக்கு அருகிலிருந்த ஒரு 'லாட்ஜி' லிருந்து தி. மு. க. காலிகள் சோடாபாட்டில்கள் வீசி கூட்டத்தைக் கலைக்க முயற்சித்தனர்,

சோடாபாட்டில்கள் வெடித்துச் சிதறியதால் கூட்டத்திற்குவந்திருந்த 50 வயது பெரியவரின் காலில் காயம் ஏற்பட்டது.

சோடாபாட்டில் சத்தம் கேட்டதும்கூட்டத்தில் சலசலப்பு ஏற்பட்டது. அமைச்சர் சவுந்தரராசன் கேட்டுக் கொண்டதற்கிணங்க மக்கள் அப்படியே மீண்டும் உட்கார்ந்து விட்டனர்.

காயமடைந்தவரை உடனடியாக மருத்துவமனைக்கு அழைத்துச் சென்று சிகிச்சையளித்தனர்.

### மரண அடி-கல்லறை

# தி.மு.க.வின் தேர்தல் பிரகடனம் இதோ!

கருணாநிதி குடும்பத்தின் அதிகார பூர்வமான நாளேடான முரசொலியில் தி.மு. கழகத்தின் தேர்தல் பிரகடனம் வெளியாகியிருக்கிறது.

அந்தப் பிரகடனத்திலே

**மரண அடி- கல்லறை**

போன்ற பதப் பிரயோகங்கள் இடம் பெற்றுள்ளன.

தேர்தல் பிரச்சாரம் தொடங்குவதற்கு முன்னதாகவே தங்களுடைய நோக்கத்தை இந்த அளவு வெளிப்படையாக முரசொலி தெரிவித்திருப்பதை கூர்ந்து கவனிக்க வேண்டும்!

இன்னொரு தி. மு. க. ஏட்டில் "எம். ஆர். ராதா தி. மு. கவுக்கு ஆதரவாகப் பிரச்சாரம்" செய்யப்போவதாக அறிவித்திருக்கிறார்.

சபாஷ்!

## மந்தைவெளியில் கே. ஏ. கே. பேசுகிறார்

சென்னை, மே 22- சென்னை 98 வது வட்டம் மந்தைவெளி ராயர்ட்சஇ பேட்டையில் (கனரா பங்க் அருகில்) ஏ. குப்புசாமி தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெறுகிறது.

வரும் 27ந்தேதி ஞாயிறு மாலை 6 மணிக்கு நடைபெறும் இக்கூட்டத்தில் அமைச்சர் கே. ஏ. கே. குடிசைமாற்றுவாரியத்தலைவர் ராமபத்திரன், நிலவழகன் ஜெ. பாலன், கு. க. செல்வம், மயிலை தமிழ்மணி, எம். கே. பாலன், மந்தைவெளி நடராசன், கே. ஸ்ரீராம், டி. ஏ. பழனி, ஆர். எஸ். தாஸ் மற்றும் பலர் பேசுகின்றனர்.

# சர்க்கரை ஆலை ஊழியர் ஊதிய உயர்வு

(முதல் பக்கத் தொடர்ச்சி)

தமிழ்நாட்டில் தொழிலாளர் பெற வேண்டும்.

ஆகவே தமிழ் நாட்டிலுள்ள சர்க்கரை ஆலைத் தொழிலாளருக்கு 1-10-78 முதல் 30 ரூபாய் 40காசு ஊதிய உயர்வாக வழங்கப் படவேண்டும்.

அகில இந்திய வாழ்க்கைப் புள்ளி ஏற்றம்300க்கு மேற்பட்ட ஒவ்வொரு புள்ளிக்கும் ஈடுசெய்ய ரூ 1-30 தரவேண்டும் என்ற வகையில் ரூ. 10.40 ஐயும் சேர்த்து 1-1-79 முதல் 40 ரூபாய் 80 காசு ஊதிய உயர்வாக தரவேண்டும்.

மேலும் எல்லா தரப்பு தொழிலாளர்களுக்கும் ஊதியத்தின் உச்சகட்டத்தை அடைந்தவர்களுக்கு அதன் பின்னர் உள்ள ஊதிய உயர்வு ஆண்டு ஒன்றுக்கு ரூபாய் 1 முதல் 5 வரை அதிகப்படுத்தப் படும். இதன் விளைவாகஒவ்வொரு தொழிலாளிக்கும் முன் பாக்கியாக 295 ரூபாய் 20 காசு கிடைக்கும். இனிவரும் மாதங்களில் ரூ. 40 ஊதிய உயர்வாகப் பெறுவார்கள்.

அரசின் ஆலோசனையை இருதரப்பினரும் ஏற்று ஒப்பந்தங்கள் செய்து தொழில் அமைதியையும், சிறுகரும்பு விவசாயிகள் நலனையும் காப்பாற்றஅரசுடன் ஒத்துழைக்குமாறு வேண்டிக் கொள்ளப்படுகிறார்கள்.

இவ்வாறு அரசு கேட்டுக் கொண்டுள்ளது.

அரசின் இந்த முடிவை அண்ணா தொழிற்சங்கப் பேரவை வரவேற்றுள்ளது.

அண்ணா தொழிற்சங்கப் பேரவையைபொறுத்தவரை நேரடி பேச்சுவார்த்தை மூலமாக எந்தவித பலனும் அளிக்காததால் வேலை நிறுத்தநோட்டீஸ் கொடுத்திருந்தோம். தொழிலாளர் நலனில் அக்கறை கொண்டுள்ள இந்த அரசு பேச்சுவார்த்தை நடத்தி வெற்றி கண்டுள்ளது. எந்த வித இழப்பும் இன்றி முன் கூட்டியே பேச்சு வார்த்தையை முடித்து கொடுத்ததற்காக அமைச்சருக்கும் அரசுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன் என்று வை, பெருமாள் கூறினர்.

### ஐ. என். டி. யூ. சி.

ஐ. என். டி. யூ. சி. தொழிற்சங்க தலைவர் எம். எஸ். ராமச்சந்திரன், டி. என். டி. யூ. சி, தொழிற்சங்கத் தலைவர் கே. எஸ், நாராயணன் ஆகியோர் அரசின் முடிவை வரவேற்றுள்ளனர்,

அமைச்சர் ராகவானந்தம் கூறியதாவது :

இந்தியாவிலே, தமிழ்நாட்டில் தான் அதிக பஞ்சப்படி உயர்வும் சம்பளமும் கொடுக்கப்படுகிறது. உத்தரபிரதேசத்தில்கிராக்கிப் படி ரூ. 20-40 மொத்த சம்பளம் 348 ரூபாய் 40 காசு.

ஆந்திராவில் கிராக்கிப் படி உயர்வு 20ரூபாய் 40 காசு. மொத்த சம்பளம் 353 ரூபாய் 40 காசு.

கருநாடகத்தில் 25 ரூபாய் கிராக்கிப்படி உயர்வு அளிக்கப்படுகிறது. மொத்த சம்பளம் 358 ரூபாய் 40 காசு வழங்கப் படுகிறது.

தமிழ்நாட்டில் கிராக்கிப் படி உயர்வு 30 ரூபாய் 40 காசு. மொத்த சம்பளம் 383 ரூபாய் 40 காசு

இந்த அளவுக்கு உயர்ந்த பஞ்சப்படியும் மொத்த சம்பளமும் இந்தியாவில் வேறு எந்த மாநிலத்திலும் கொடுக்கப் படவில்லை உயர்த்தப்படவும் இல்லை.

இவ்வாறு அமைச்சர் ராகவானந்தம் கூறினர்.

## நாகை - தஞ்சைத் தொகுதிகள்

# தலைமைக் கழகம் அறிவிப்பு

மாண்புமிகு புரட்சித் தலைவர் அவர்கள் முன்னிலையில் 21-5-79 இரவு 9-மணி அளவில் கூடிய தேர்தல் ஆய்வுக் குழுவானது நாகை நாடாளுமன்றத் தொகுதியின் இடைத் தேர்தலில், அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக வேட்பாளராகக் கோட்டூர் பகுதி நெம்மேலி கிராமத்தைச் சார்ந்த திரு. மா. மகாலிங்கம் பி.ஏ. அவர்களை நிறுத்தி வைப்பது என்றும், தலைமைச் செயற்குழு எடுத்த முடிவிற்கிணங்க, தஞ்சை நாடாளுமன்றத் தொகுதியை இந்திரா காங்கிரசுக் கட்சி வேட்பாளருக்கு விட்டுக் கொடுப்பது என்றும் தீர்மானிக்கிறது.

## டிக்காகான் விடுதலை

ராவல்பிண்டி, மே 22- பாகிஸ்தான் ராணுவத்தின் முன்னாள் தளபதியான ஜெனரல் டிக்காகான் 'வீட்டுக் காவலில்' வைக்கப்பட்டிருந்தார் அல்லவா? அவரை பாகிஸ்தான் அரசு நேற்று விடுதலை செய்தது.

# தடையைமீறிய தாக சஞ்சய் மற்றும் 200 பேர் கைது

டேராடுன், மே 22-சஞ்சய்காந்தி, ஆர். கே. திரிகா மற்றும் 200க்கும் மேலானவர்கள் நேற்று கைது செய்யப்பட்டனர்.

சஞ்சய் காந்தி, ஆர்.கே. திரிகா மற்றும் 200க்கும் மேற்பட்டவர்கள் 144 தடை உத்தரவை மீறியதாக நேற்று டேராடுனில் கைது செய்யப்பட்டனர்.

எண்ணெ எரிவாயு கமிஷன், மாருதி ரோடுரோலர் வழக்கு சம்பந்தமாக விசேஷ நீதிபதிகோர்ட்டில் (லஞ்ச ஊழல் தடுப்பு) ஆஜராக சஞ்சய் வந்திருந்தார்.

பின்னர் இவர்கள் பரெய்லி சிறைக்கு அனுப்பட்டனர்.

சஞ்சய் காந்தியும் திரிகாவும் இவ்வழக்கு நடந்து கொண்டிருக்கையில் நேற்று இரண்டாவது முறையாக கைது செய்யப்பட்டனர்.

ஏப்ரல் மாதம் 27ந்தேதி கோர்ட்டில் ஆஜராகதவறியதால் இவர்களுக்கு வழங்கப்பட்ட ஜாமீன் ரத்து செய்யப்பட்டது.

இவ்வழக்கு சம்பந்தப்பட்ட மற்ற 3 எதிரிகளும் நேற்று கோர்ட்டிற்கு வந்திருந்தனர்.

சஞ்சய் காந்தி ஆதரவாளர்களுக்கும் எதிர்ப்பாளருக்குமிடையே மோதல் ஏற்பட்டது.

சஞ்சய்காந்தியுடன் 12 பேர்தான் கோர்ட்டுக்கு வர அனுமதிக்கப் பட்டிருந்தது.

ஆனால் நேற்று 150 பேர்களும் கோர்ட்டுக்குள் செல்ல வேண்டும் என்று கோரினர்.

## நாளை வேட்புமனு தாக்கல்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

எஸ். டி. எஸ். பண்ருட்டி ராமச்சந்திரன், கே. ஏ. கே, ஆர். எம். வீ, பி. டி. சரஸ்வதி, அப்துல்காதர், துரை கோவிந்தராசன் ஆகியோர் கலந்துகொண்டனர்.

நாகை நாடாளுமன்ற தொகுதி இடைத் தேர்தலில் கழக வேட்பாளராக மா. மகாலிங்கம் பி. ஏ, போட்டியிடுவார்என்று அறிவிக்கப்பட்டது.

நாகை தொகுதிவேட்பாளராக மா. மகாலிங்கம் நாளை (23ந் தேதி) தஞ்சையில் தேர்தல் அதிகாரி முன்னர் வேட்புமனுவைத் தாக்கல் செய்வார்.

### மகாலிங்கம்

கழக வேட்பாளர் மா.மகாலிங்கத்துக்குவயது 28. மன்னார்குடி அருகே உள்ள நெம்மேலி. இவரது சொந்த ஊர். கழகம் தொடங்கியது முதல்இவர் கழக உறுப்பினராக உள்ளார். மகாலிங்கம் பி. ஏ. படித்தவர். இவருக்கு திருமணமாகிவிட்டது. மனைவியார் பெயர் சரோஜா. ராஜசேகரன் என்ற ஒரு வயது மகன் இருக்கிறான்.

### மறைவு

மாதவரம் நாகரிய கழக அமைப்பாளர் என், தர்மலிங்கத்தின் தாயாரும், நடேசனின் துணைவியாருமான பார்வதி அம்மாள் நேற்று (21ந் தேதி) இரவு 11 மணிக்கு இயற்கை எய்தினர்.

# வீட்டுக் காவலில் பூட்டோ மனைவி - மகள் படும் அவதி

ராவல்பிண்டி, மே 22- பூட்டோவின் மனைவியும் மகளும் வசதியற்ற ஒரு வீட்டில் அடைத்து வைக்கப்பட்டுள்ளனர்.

பாகிஸ்தான் பிரதமர் பதவியிலிருந்து கவிழ்க்கப்பட்ட பூட்டோ தூக்கிலிடப்பட்டார் அல்லவா ?

பூட்டோவின் மனைவி நசரத் பூட்டோவும், மகள் பெனுசிரும் (வயது 26)வீட்டுக்காவலில் வைக்கப்பட்டுள்ளனர்.

பூட்டோஆட்சியை ஜியா உல்அக், கவிழ்த்து ஆட்சிக்குவந்த1977ம்ஆண்டு ஜூலையில் இருந்தே அவர்கள் வீட்டுக்காவலில் வைக்கப்பட்டு வந்தனர்

தற்போது ராவல்பிண்டி அருகே சிகாலா போலீஸ் முகாம் அருகே உள்ள ஒரு வீட்டில் காவலில் வைக்கப்பட்டுள்ளனர். 2 அறை கொண்ட வீடு அது.

அங்கு சரியான கக்கூஸ் வசதி, காற்றோட்ட வசதி எதுவும் கிடையாது

பலத்த போலீஸ் காவலும் போடப்பட்டுள்ளது.

பூட்டோ ஆதரவாளர்கள் 60 ஆயிரம் பேர் பாகிஸ்தானில் கைது செய்யப்பட்டுள்ளனர்.

## சமையல் காஸ் சப்ளை: விரைவில் கட்டுப்பாடு நீங்கும்

சென்னை, மே 22-சமையல் செய்யப் பயன்படுத்தப்படும் சமையல் காஸ் (எல்.பி.ஜி.) சப்ளைகுறித்து இந்தியன் ஆயில் நிறுவனம் விதித்துள்ள 30 நாள் கட்டுப்பாடு விரைவில் நீக்கப் படும் நிலை உருவாகியுள்ளது.

சென்னை மணலியிலுள்ள எண்ணெ சுத்திகரிப்பு தொழிற்சாலையில் தினமும் 10 ஆயிரம் சிலிண்டர் சமையல்காஸ் உற்பத்தி செய்யத் தொடங்கி விட்டது.

இதனால் எந்தவிதகட்டுப்பாடுமின்றி வரும் ஜூன் மாதம்முதல்தேதியிலிருந்து முன்பு வழங்கப்பட்டதைப் போல் 24 மணி நேரத்தில் சப்ளை செய்யப்படும்.

சென்னைநகரத்தில்சுமார் ஒரு லட்சத்து 15 ஆயிரம் பேர் சமையல் காஸ் பயன் படுத்துகிறார்கள். 26 நிறுவனங்கள் இவர்களுக்கு காஸ் சப்ளை செய்கிறது.

சென்னை நகரில் மட்டும் சமையல் காஸ் கோரி புதிதாக 85 ஆயிரம் மனுக்கள் வந்துள்ளன. இன்னும் ஓரிரு ஆண்டுகளில் இவர்களுக்கு இணைப்பு கிடைக்கும்.

# எட்மண்ட் வற்புறுத்தல்

(முதல் பக்கத் தொடர்ச்சி)



நெல்லுக்கும் கொடுக்க வேண்டும்.

அஸ்ஸாமில் நெல் சாகுபடிச் செலவு ரூ55.46 என்று கூறுகிறீர்கள். ஆனால் அவர்களுக்கும்நெல் விலை ரூ. 90 என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. அதாவது அஸ்ஸாம் விவசாயிக்கு சுமார் 35 ரூபாய் லாபம் கிடைக்கிறது.

ஆனால் தமிழ் நாட்டுக்கும் அதே 90 ரூபாய் என்று கூறினால், அதிகசாகுபடி செலவு செய்த தமிழக விவசாயிக்கு விவசாய விலைக் குழுவின் கணக்குபடி பார்த்தாலும் குவிண்டால் நெல்லுக்கு 79 காசு நட்டம் ஏற்படுகிறது. இது நியாயந்தானா?

கோதுமை சாகுபடியாளரைவிட நெல் சாகுபடியாளர்கள் அதிக பயன் பெறத் தக்க விதத்தில் விலை நிர்ணயித்திருப்பதாகக் கூறுவது புள்ளி விவரத் தில்லுமுல்லு,

அப்படி பார்த்தாலும் கோதுமை விலைக்கும் நெல் விலைக்கும் இடையே ரூ. 25 வித்தியாசம் உள்ளது.

மாநில அரசு மத்திய கிடங்குக்குக் கொடுத்துள்ள 2 லட்சம் டன் அரிசியை எடுத்துச் செல்ல இந்திய உணவு கார்ப்பரேஷன் ஏற்பாடு செய்யவில்லை. மத்திய அரசுக்கு திருப்பிக் கொடுக்க வேண்டிய 70 ஆயிரம் டன் அரிசியையும் எடுத்துச் செல்லவில்லை.

அரிசிக் கிடங்குகள் எல்லாம் நிரம்பி விட்டன. 30 லட்சம் டன் அரிசி உள்ளது. இதில் ரூ. 60 கோடி முடக்கப்பட்டுள்ளது

இவற்றை உணவுக்கார்ப்பரேஷன் எடுத்துச் செல்லாததால் மாநில அரசு மேலும் நெல் கொள்முதல் செய்வதில் சிரமம் ஏற்படுகிறது.

இவ்வாறு அமைச்சர் எட்மண்ட் கூறினர்.

## சாராய கடத்தல்: கார் பறிமுதல்

சென்னை. மே 22-ஆந்திராவிலிருந்துஎண்ணூரை நோக்கி ஒரு கார் வேகமாக வந்து கொண்டிருந்தது. சந்தேகத்தின் பேரில் எண்ணூர் போலீசார் அந்தக் காரை மடக்கி சோதனை செய்தனர்.

சோதனையின் போது அந்தக் காரில் சாராயம் இருந்தது கண்டுபிடிக்கப் பட்டது. 8 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள சாராயம் 13 கேன்களில் வைக்கப்பட்டிருந்தது. சாராயம் கைப்பற்றப்பட்டுபறிமுதல் செய்யப்பட்டது.

சாராயம் கடத்திய அம்பாசிடர் காரையும் போலீசார் பறிமுதல் செய்தனர். காரை ஓட்டி வந்த கோபியைபோலீசார்கைது செய்து விசாரித்து வருகின்றனர்.

## ஐ. ஏ. எஸ். அதிகாரியாக நடித்து பெண்ணை ஏய்த்தவர்

சென்னை, மே 22- கேரளாவைச் சேர்ந்தவர் ராமநாதன். (வயது 40) வேலைதருவதாக பத்திரிகைகளில்விளம்பரம்செய்தார். டெலிபோன் ஆபரேட்டர் வேலைக்கு ஆட்கள் தேவை என்று இவர் செய்திருந்த விளம்பரத்தை யொட்டி அமைந்தகரையைச்சேர்ந்த நளினி (வயது 27) விண்ணப்பம் போட்டிருந்தார். நளினியை எழும்பூர் ரயில் நிலைய ஒய்வு விடுதிக்கு வரச்சொல்லி ராமநாதன் தெரிவித்திருந்தார்.

நளினி அங்கு சென்றதும் திருப்பதி தேவஸ்தானத்தில் வேலை வாங்கித் தருவதாக திருப்பதி அழைத்துச் சென்றார். அங்கிருந்து குருவாயூரில் வேலை இருப்பதாக கூறி குருவாயூருக்குக் கொண்டு சென்றார்.

மீண்டும் கோவைக்கு நளினியை அழைத்து வந்தார். உடனே நளினி போலீசில் புகார் கொடுத்தார்.

எழும்பூர் ரயில்வே போலீசார் ராமநாதனைக் கைது செய்து வழக்குத்தொடர்ந்தனர்.

வழக்கை விசாரித்த நீதிபதி குருசாமி, ராமநாதனுக்கு 8 மாத கடுங்காவல் தண்டனை விதித்தார்.

பஞ்சாலைத் தொழிலாளர் பிரச்சினை

# அரசியல் ஆதாயம் தேடும் உமாநாத்: ஐஎன்டியுசி கண்டனம்

**சென்னை,மே 22-பஞ்சாலைத் தொழிலாளர்கள் பிரச்சினையில் தமிழக அரசின் நல்லெண்ணத்தைப் பாராட்டியும் இதில் அரசியல் ஆதாயம் தேடும் மார்க்சிஸ்ட் சங்கத்தை கண்டித்தும் ஐ. என் டி யு சி பிரமுகர் பி எல் சுப்பையன் அறிக்கை விடுத்துள்ளார்.**

தமிழ்நாடு ஐ. என். டி. யு. சி. அமைப்புச் செயலாளரும், கோவை மாவட்ட ஐ. என். டி. யு. சி. பஞ்சாலை-சங்கத்தின் பொதுச் செயலாளருமான பி. எல், சுப்பையன் கூறியிருப்பதாவது:-

19-5-1979ம் தேதி தமிழக தொழிலாளர் நல அமைச்சர் முன்பு நடைபெற்ற பேச்சுவார்த்தை முறிந்து விட்டதாகவும், அதற்கு அமைச்சரைக் குறைகூறியும் சிஐடியுஉமாநாத் அறிக்கை விடுத்துள்ளார்.

எதையும் அரசியல் ஆக்கும் இந்தியப் பொது உடைமைவாதிகளின் உள்நோக்கத்தை அது வெளிப்படுத்துகிறது. பேச்சுவார்த்தை முறிந்ததாக கூறுவது தவறு.

22-5-79-ம்தேதி(இன்று) தொடர்ந்து பேச்சுவார்த்தை நடைபெறுகிறது இதேபோன்ற கோரிக்கைகளின் தொடர்பாக, மேற்கு வங்காளம், மகாராஷ்டிரம், குஜராத் போன்ற மாநிலங்களில் வேலைநிறுத்தம் தவிர்க்கப்பட்டு, அரசின் அறிவுரைகளை இருதரப்பாரும் ஏற்றுக்கொண்டு ஒரு உடன்பாடு ஏற்படுத்தியுள்ளதை இச்சந்தர்ப்பத்தில் நினைவுபடுத்துகிறேன்.

### அமைச்சர் உறுதி

அதேபோல் நமது மாநிலத்திலும் ஓர் உடன்பாடுஏற்படவேண்டுமென்று அமைச்சரைக் கேட்டுக் கொண்டனர். மற்ற மாநிலங்களில் கிடைத்ததைவிட கூடுதலாக நமது மாநிலத்திலுள்ள பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கு சம்பள உயர்வு கிடைத்திட தான் உதவுவதாக அமைச்சர் அவர்கள் உறுதி கூறினர். இதில் எவ்வித நிர்ப்பந்தமும் இல்லை. இதனால் பேச்சுவார்த்தை முடியவுமில்லை. சிஐடியு உட்பட அனைத்து பஞ்சாலை தொழிற்சங்கங்களின் கூட்டுக் கமிட்டிகள் இப்பேச்சு வார்த்தையில் கலந்து கொண்டன.

அமைச்சரின் ஆலோசனையைப்பற்றி சங்கங்களின் கூட்டுக் கமிட்டி ஆலோசித்து பிறகு முடிவு கூறுவதாக 19-5-1979ம் தேதி மாலை 3-மணிக்கு சட்டமன்ற காங்கிரஸ் அலுவலகத்தில் கூட்டம் கூட்டி இவ்விஷயம் குறித்து ஆலோசிக்கப்பட்டது. அந்தக்கூட்டத்தில் முடிவு ஏற்படாமல் அமைச்சரின் ஆலோசனை தொடர்ந்து பரிசிலனையில் இருக்கிறது.

### சி.ஐ.டி.யு குழப்பம்

இந்நிலையில் சிஐடியு கூறுவது உண்மைக்கு புறம்பானது மட்டுமின்றி சகோதரசங்கங்களையும் குழப்பத்தில் ஆழ்த்தியிருக்கிறது. தொழிலாளர்கள்மத்தியில் சந்தேகங்களையும்குழப்பத்தையும்ஏற்படுத்தியுள்ளது. அமைச்சர்அவர்கள் மற்ற மாநிலங்களைக் காட்டிலும் பஞ்சாலை தொழிலாளர்களுக்கு சம்பள உயர்வு அதிகமாக கொடுக்கத்தக்க ஏற்பாட்டினை செய்வதாக உறுதி கூறியிருந்த போதிலும் சிஐடியு வேண்டுமென்றே இம்மாதிரி நல்ல ஒப்பந்தம் ஏற்படாமல் இருக்க இது போன்ற அறிக்கை விட்டிருக்கிறது.

### அரசியல் ஆதாயம்

நமது மாநிலத்தில் அமைதி ஏற்பட்டு, உற்பத்தி பெருகி நியாயமான விலையில் பொது மக்களுக்கு துணி கொடுக்க ஏற்பாடு செய்து கொண்டு இருக்கும் இந்தநேரத்தில் சி.ஐ.டி.யு. போல் அமைதியின்மையை ஏற்படுத்தி, உற்பத்திக்கு பங்கம் ஏற்படுத்தி அரசியல் ஆதாயம் தேட நினைப்பவர்களுக்கு, சகோதர சங்கம் இடம் தரவேண்டாமென்று கேட்டுக் கொள்வதோடு, இப்பிரச்சினை வெற்றியடையச் செய்ய தமிழக தொழிலாளர் நல அமைச்சருக்கும் அரசுக்கும் எங்களின் நல்லெண்ணத்தையும்- பாராட்டுக்களையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

இவ்வாறு பி. எல். சுப்பையன் தமது அறிக்கையில் கூறியுள்ளார்.



அமைச்சர் சவுந்தரராசன்:

## நள்ளிரவில் ஸ்டான்லி மருத்துவ மனையில் திடீர் சோதனை

சென்னை, மே 22- சென்னை ஸ்டான்லி மருத்துவமனையில் நள்ளிரவில் அமைச்சர் சவுந்தரராசன் திடீரென சென்று சோதனை நடத்தினர்.

நேற்று (திங்கள்) இரவு 12 மணிக்கு ஸ்டான்லி மருத்துவமனைக்கு சென்ற அமைச்சர் சவுந்தரராசன் அங்கு மருந்துகள் வைக்கப்பட்டிருக்கும் பிரிவுக்குச் சென்று இருப்புப் பட்டியலை சரிபார்த்து சோதனையிட்டார்,

ஒவ்வொருமாவட்டத்திலிருந்தும்

## 500 கழக மாணவர்கள் தேர்தல் பணிகளில் ஈடுபட முடிவு

**சென்னை. மே 22-ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் ஐந்நூறு மாணவர்கள் தேர்தல் பணிகளில் ஈடுபடுவது என்று அனைத்து மாவட்டக் கழக மாணவர் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.**

அனைத்து மாவட்ட கழக மாணவர் அமைப்பாளர்கள் கூட்டம் சட்டமன்ற கழக அலுவலகத்தில் நடந்தது. தஞ்சை- நாகை இடைத் தேர்தல்கள் குறித்து இந்தக் கூட்டத்தில் ஆலோசனை செய்யப்பட்டது.

கழக மாணவர் பிரிவு அமைப்பாளர் ஆ. வெள்ளைச்சாமி தலைமை வகித்தார்.

### பங்கேற்றோர்

வடாற்காடு மாவட்ட மாணவர் அமைப்பாளர் ஏ. சி. சண்முகம், சென்னை மாவட்ட மாணவர் துணை அமைப்பாளர் கே. பி. ராமலிங்கம் செங்கை மாவட்டமாணவர் அமைப்பாளர் ஜெகத்ரட்சகன், சேலம் மாவட்ட மாணவர் அமைப்பாளர் எம். நடேசன் மதுரை மாவட்ட மாணவர்அமைப்பாளர் ராசன் செல்லப்பா தருமபுரிமாவட்டமாணவர் அமைப்பாளர் எம். ஜி. சேகர், திருச்சி மாவட்ட மாணவர் அமைப்பாளர் புருசோத்தமன், தென்னாற்காடு மாவட்ட மாணவர் அமைப்பாளர் முருகமணி, சிதம்பரம், ராஜாராம் உள்பட பலர் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

தஞ்சை-நாகை தேர்தல் பணி குறித்துஇந்த ஆலோசனைக் கூட்டத்தில் விவாதிக்கப்பட்டது.

### முடிவுகள்

கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட பல முக்கிய முடிவுகள் விவரம் வருமாறு:

மாவட்டத்துக்குஐந்நூறு மாணவர்கள் வீதம் தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபடுவது.

கழகம் எடுக்கும் எந்த முடிவையும் ஏற்று தீவிர தேர்தல் பணியாற்றுவது:

தேர்தலில் போட்டியிடும் கழக வேட்பாளருக்கு டெபாசிட் தொகையை மாணவர் கழகமே கட்டுவது.

இவ்வாறு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.



## ஜெ. பி. உடல்நிலை திருப்திகரம்

பம்பாய், மே 22-ஜெயப்பிரகாஷ் நாராயணனுக்கு ஏற்பட்ட மூச்சுத் திணறல் குணமாகி அவர் மருத்துவமனையிலிருந்து வீடு திரும்பினர்.

அடுத்த மாதம் முதல் வாரத்தில் ஜெயப்பிரகாஷ் பாட்னா திரும்புவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

### நல்லத்துக்குடி

23-5-79 அன்றுமாலை 7 மணிக்கு நல்லத்துக்குடி நடுத்தெருவில் ஏ. பக்கிரிசாமி தலைமையில் பேசுவோர்: தம்பிசிவம், கோவி. நாராயணசாமி, கோ. பெருமாள், தம்பி பாலவேலாயுதம், க. பழனிச்சாமி, அன்புக்கண்ணன், ஆர். ராமகிருஷ்ணன் மற்றும்பலர்.

ஆர்.எஸ்.மங்கலத்தில்

## ரூ. 15 லட்சம் செலவில் புதிய பாலம் அமைப்பு

நாமக்கல் அருணுசலம்திறந்தார்

**மதுரை, மே 22-- ரூ, 15 லட்சம் செலவில் கட்டப்பட்ட ஆர். எஸ் .மங்கலம், பெரிய கண்மாய் பாலத்தை சுகாதார அமைச்சரின் பேரவைச் செயலர் நாமக்கல் அருணுசலம் திறந்து வைத்தார்.**

ஆர். எஸ். மங்கலம் பாலத்திறப்பு விழாவிற்கு நிதியமைச்சரின் பேரவைச் செயலர் நாஞ்சில் வின்சென்ட் தலைமை தாங்கினார்.

நெடுஞ்சாலை ஊரகப் பணித்துறை தலைமைப் பொறியாளர் ஈ. சி. சந்திரசேகரன் அறிக்கை வாசித்தார். ஆர் எஸ். மங்கலம் ஊர்மக்கள் தலைவர் முத்து இப்ராகிம் பேரவைச் செயலர்களுக்கு வரவேற்பிதழ்வாசித்தளித்தார்.

மதுரை நெடுஞ்சாலை கண்காணிப்புபொறியாளர் கிருஷ்ணவிஜயன் நன்றி கூறினர்.

### நாஞ்சில் வின்சென்ட்

விழாவுக்கு தலைமை வகித்து நாஞ்சில் வின்சென்ட் பேசியதாவது:-

அனைத்து கிராமங்களுக்கும் சாலை மற்றும் போக்குவரத்து வசதிகளைச் செய்திட ஆய்வு நடைபெற்று வருகின்றது. இதனடிப்படையில் கிராமங்களுக்கு எட்டரைக் கோடி ரூபாய் செலவில் 520 புதிய மினி பஸ்கள் விடப்பட உள்ளன.

இவ்வாறு நாஞ்சில் வின்சென்ட் பேசினர்.

புதிய பாலத்தைத்திறந்து வைத்து நாமக்கல் அருணுசலம் பேசியதாவது:

சுதந்திரமடைந்து 31 ஆண்டுகளில் செய்ய முடியாத திட்டங்களை முதல்வர் புரட்சித் தலைவர் செய்து வருகிறார். அவரது ஆட்சி காலத்தில் ஏழை மக்கள் நன்மை அடைய முடியவில்லையென்றால் வேறு எவர் காலத்திலும் நன்மையைப் பெற முடியாது.

விவசாயிகளின் பிரச்சினைகளைத் தீர்க்க விவசாய உச்சமட்டக்குழு அமைக்கப்பட்டுள்ளது. ஆனால் இன்றையதினம்விவசாயிகள் போராட்டம் என்ற ரீதியில் பலர் வன்முறையில் ஈடுபட்டு இம்மாதிரி பாலங்களை வெடி வைத்துத் தகர்ப்பது, பஸ், லாரிகளை எரிப்பதுபோன்ற செயல்களில் ஈடுபட்டு வருகிறார்கள்.

இவ்வாறு நாமக்கல் அருணுசலம் பேசினர்.

மேதின ஊர்வலத்தில்புகுந்து திமுக கொலைவெறிதாண்டவம்

# கழகத் தோழர்கள் 4பேர் கவலைக்கிடம்

**தூத்துக்குடி, மே 22-தூத்துக்குடியில் மேதின ஊர்வலம் நடத்திய கழகத் தோழர்கள்மீது தி.மு.க. காலிகள் கொலை வெறித் தாக்குதல் நடத்தினர்கள் 4 கழகத் தோழர்கள் நிலைமை கவலைக்கிடமாக உள்ளது.**

தூத்துக்குடியில் கழகத் தோழர்கள் நேற்று முன் தினம் மேதின விழா ஊர்வலம் நடத்தினர்கள். ஊர்வலத்தில் பல்லாயிரக்கணக்கான தோழர்கள் கலந்து கொண்டனர்.

கழகத்தோழர்கள் சீரும் சிறப்புடனும் மேதின விழா ஊர்வலத்தைநடத்தியதைக் கண்டு பொறுக்க மாட்டாத தி.மு.க. காலிகள் ஊர்வலத்தைச் சிதைக்க முயன்றனர்.

### கல் வீச்சு

அண்ணுவின் கொள்கைகளை அமைதியாக முழக்கமிட்டுச் சென்ற தோழர்கள் மீது தி. மு. க. குண்டர்கள் கல் வீசினர்கள். என்றாலும் கழகத் தோழர்கள்அமைதிகாத்து ஊர்வலமாகச் சென்றனர்.

தி. மு. க. காலிகளின் தாக்குதல் அதிகம் ஆனது. மேலும் ஊர்வலத்துக்குள் குபீர் என்றுபாய்ந்துகலகம் விளைவித்தனர்.

கழகக் கொடிகளையும் வெட்டினர்.

### படுகாயம்

தி. மு. க.வினரின் கல் வீச்சால் 2 உதவி சப்இன்ஸ்பெக்டர்களும், 6 போலீஸ்காரர்களும் காயமுற்றனர். அவர்கள் அனைவரும் அரசினர் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்றார்கள்.

சந்தை திடல் பக்கம் தீயணைப்பு நிலையம் அருகே கழகத் தோழர்கள் மீது தி. மு. க.வினர் நடத்திய தாக்குதலில் கழகத் தோழர்கள் 4 பேருக்கு கத்திக்குத்து விழுந்தது. 4 பேர் நிலைமையும் கவலைக்கிடமாக உள்ளது.

4 பேரும் உடனடியாக மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டனர்.

### சவுந்தரராசன்

மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் ஆர். சவுந்தரராசன் மே தின விழாவில் கலந்து கொள்ள தூத்துக்குடிக்கு வந்திருந்தார். தி. மு. க. காலிகளின் கொலை வெறியால் படுகாயம் அடைந்த 4தோழர்களையும் மருத்துவமனைக்குச் சென்று அவர் பார்த்தார்.

### கொதிப்பு

தி. மு. க. ரவுடிகளின் கொலை வெறி தூத்துக்குடி மக்கள் இடையே கொதிப்பை ஏற்படுத்தியுள்ளது.

திருநெல்வேலி போலீஸ் டி. ஐ. ஜி. சி.துரைராஜ், அடிஷனல் போலீஸ் சூப்பிரண்டு வி. ஜெகன்நாதன் ஆகியோர் அங்கு விரைந்து சென்று பந்தோபஸ்து ஏற்பாடுகளைச் செய்துள்ளார்கள்.

## பெரோஸ்பூர் தொகுதி : அகாலிதளம் வெற்றி

சண்டிகார், மே 22- பெரோஸ்பூர் நாடாளுமன்றத்தொகுதி இடைத் தேர்தலில் அகாலிதள வேட்பாளர் மோகிந்தர் சிங் சயனவாலா வெற்றி பெற்றார்.

ஐகோர்ட் உத்தரவுப்படி பசில்கா பகுதியில் மீண்டும் வாக்குப்பதிவு நடைபெற்றதால் காங்கிரஸ் வேட்பாளரை விட 7600 வாக்குகள் அகாலிதள வேட்பாளர் அதிகம் எடுத்தார்.



## படப்பிடிப்பில் விபத்து:ஐசரிவேலனுக்கு காயம்

வேலூர், மே. 22- படப்பிடிப்பு ஒன்றில் கலந்து கொண்ட போது அமைச்சரின் பேரவைச் செயலர் ஐசரிவேலன் மலையில் இருந்து உருண்டு விழுந்து காயமடைந்தார்.

'நான் நன்றி சொல்வேன்' படத்தில் ஐசரிவேலன், சந்திரன், கண்ணன் ஆகியோர் நடிக்கிறார்கள். இந்த படத்திற்கான வெளிப்புற படப்பிடிப்பு வடஆற்காடு மாவட்டம் சோளிங்கரில் உள்ள யோக ஆஞ்சனேயர் மலையில் படமாக்கப்பட்டது.

இந்த படப்பிடிப்பில் ஐசரிவேலன் கலந்துகொண்டார்.

கள்ள நோட்டு கும்பல் ஒன்று ஒரு பெண்ணை கடத்திச் செல்கின்றது. அந்த கும்பலிடம் இருந்து அந்த பெண்ணை காப்பாற்றுவது போன்ற சண்டைக் காட்சி படமாக்கப்பட்டது.

இந்த சண்டைக் காட்சியில் நடித்த ஐசரிவேலன் மலையில் இருந்து உருண்டு விழுந்து விட்டார். இதனால் அவருக்கு காயம் ஏற்பட்டது.

ஐசரிவேலனுடன் நடித்த சந்திரன், கண்ணன் ஆகியோருக்கும் காயம் ஏற்பட்டது.

ரத்தகாயம் ஏற்பட்ட ஐசரிவேலனுக்கு உடனே சிகிச்சை அளிக்கப்பட்டது. மற்றவர்களுக்கும் சிகிச்சை அளிக்கப்பட்டது.



தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வை சண்முகம்சாலை, சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர்: பி. தங்கராஜன், நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை, சென்னை-600004.
ஆசிரியர் : எம்.ஜி.சக்ரபாணி

# அண்ணு




## சட்டக்கல்லூரி கழக மாணவர் கூட்டம்

சென்னை, மே22-சென்னை சட்டக்கல்லூரி கழக மாணவர் ஆலோசனைக் கூட்டம் சென்னை மாவட்ட மாணவ அமைப்பாளர் கே. எம். சுப்பிரமணியன் தலைமையில் நடந்தது.

வி. ஜி. சீனிவாசன், கே, சுந்தர், சி. இளங்கோ, ஆர். பன்னீர் செல்வம், ஜி. அரிகிருஷ்ணன், ஆர். ஆனந்தராசு, என்.சம்பத், எஸ். நாகராஜன், சி. ராகவன், எஸ், பிரசாத், எஸ். ரத்தினவேல், ஏ. மெய்ஒளிவாணன், ஏ. சின்னதுரை, ஆர். அழகுராசன், மணிமாறன் வி. தட்சிணமூர்த்தி, மற்றும் பலர் கலந்துகொண்டு பேசினர்,

தஞ்சை, நாகை இடைத் தேர்தலில் தலைமைக்கழகம் அறிவிக்கும் முடிவினை ஏற்று, கழக வேட்பாளர்களின் வெற்றிக்கு உழைப்பது என்று கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

## திமுக ஆட்சி காலத்திய பொய் வழக்கு: கழகத் தோழர் சாட்சியம்

சென்னை, மே 22-கருணாநிதி ஆட்சி காலத்தில் போலீசார் என்னைக் கைதுசெய்து பொய் வழக்கு போட்டார்கள் என்று கழகத் தோழர் ஒருவர் கிருஷ்ணசாமி நாயுடு கமிஷன் முன்னிலையில் கூறினர்.

தி. மு. கழக ஆட்சி காலத்தில் நடந்த அத்துமீறல்கள் குறித்து சென்னை உயர்நீதி மன்றத்தின் முன்னாள் நீதிபதி கிருஷ்ணசாமி நாயுடு விசாரணை நடத்தி வருகிறார். இந்த விசாரணை சென்னை அண்ணா சாலையிலுள்ள மாவட்ட மத்திய நூலகக் கட்டிடத்தில் நடந்து வருகிறது.

நேற்று (திங்கள்) நடந்த விசாரணையில் மதுரை 40-வது வட்டத்தைச் சேர்ந்த கழகத் தோழரும் சரவணா சைக்கிள் கம்பெனி நிர்வாகியுமான நல்லு (வயது 25) சாட்சியம் அளித்தார்.

### ஏஜெண்டுகள்

நல்லு தமது சாட்சியத்தில் கூறியதாவது:

1972ஆம்ஆண்டு மதுரையில் போலீஸ் அதிகாரிகள் தி. மு. கவின் ஏஜெண்டுகள் போல செயல்பட்டார்கள். என்னைக் கைதுசெய்து பொய் வழக்கு போட்டார்கள்.

பல மாதங்கள் வழக்கு நடந்தது. கடைசியில் எனக்கு ஐம்பது ரூபாய் அபராதம் விதிக்கும்படியும் செய்தனர்.

### மீண்டும் தொல்லை

1974 ஆம் ஆண்டு கருணாநிதி மதுரைக்குவந்தபோது என்னையும் மற்றும் சிலரையும் போலீசார் கைது செய்தனர்.

மதுரை தெற்கு மாசி வீதியில் துணியைப்போர்த்திக்கொண்டு வீட்டிற்கு வெளியே இருட்டில் சந்தேகப்படும்படியாக படுத்து இருந்ததாகப் போலீசார் பொய்வழக்குப் போட்டனர். அதில் நான் விடுதலை செய்யப்பட்டேன்.

உண்மையில் அன்றைக்கு நான் வீட்டிற்குள்தான் படுத்து இருந்தேன். வேண்டும் என்றே போலீசார் என்னைக் கைது செய்தார்கள்.

இவ்வாறு நல்லு சாட்சியம் அளித்தார்.

இந்த வழக்கு ஜூன் மாதம் முதல் தேதிக்கு தள்ளிவைக்கப்பட்டது.

## கழகச் செய்திகள்

### 78-வது வட்டம்

22-5-79 செவ்வாய் மாலை 7 மணிக்கு சென்னை 78வது வட்டம் அம்மையப்பன் முதலி தெருவில் ஏழுமலை தலைமையில் பேசுவோர்: பா. அங்கமுத்து, த. சதானந்தம், சு. எத்திராசன், பி. விஜயகம் மற்றும் பலர்.

நெல்லைகலையரசன் கலைக்குழுவின் இன்னிசை நிகழ்ச்சியும் நடக்கிறது.

### சூளைமேடு

22-5-79 செவ்வாய் மாலை 7 மணிக்கு காந்தி சிலை அருகில் ஆர். எம். நீலகண்டன் தலைமையில் பேசுவோர்: மதுரை வளர்மதி, மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, இரா. சடகோபன், வ. கோதண்டராமன், கு. க, செல்வம், செ, சுந்தரம், ஜெயராமன், மார்க்கெட் மணி, சுந்தரம், மாபூப்கான், பால்ராஜ், பாண்டியன், பொ. நாராயணன், சுப்பிரமணி மற்றும் பலர்.

### பூங்காதொகுதி

22-5-79 மாலை7மணிக்கு வீரப்பன் தெரு, என்.எஸ். சி. போஸ் ரோடு (வீகம்சி அருகில்)ஜி,பாபுராவ் தலைமையில் பேசுவோர்-பார்லிமெண்டரி செயலர் ஐசரி வேலன்,சி.வி. அன்புதம்பி, ராமகிருஷ்ணபாபு, பரங்கிமலை நாகராசன், துரையரசன் ஏ,வி.கிருஷ்ணமூர்த்தி சண்முகம்,பாளையம், லட்சுமிமுத்து, ராதாகிருஷ்ணன்,சம்பத்,தியாகராசன் தேவராஜ், ஆனந்தன், மாணிக்கம், கோபிநாத், பாபு ராமமூர்த்தி மூர்த்தி, ஏழுமலை மற்றும் பலர்.

### கோடம்பாக்கம்

23-5-79 புதன் மாலை 7 மணிக்கு சென்னை 114-வது வட்டம், லிபர்டி திரையரங்கு அருகே சி. வீரராகவன் தலைமையில் பேசுவோர்: கோடம்பாக்கம் குமார், பா. வளர்மதி கு. க. செல்வம், சா. கோவிந்தசாமி, தி.நகர். மூர்த்தி, கலியமூர்த்தி, வி. கு. சச்சிதானந்தம், பி.ஏ. கணபதி. மதிவாணன், பி.பி. சாமி, செ. சுந்தரம், என். சீலன், எஸ். ஏழுமலை மற்றும் பலர்.

### மாயூரம்

27-5-79 அன்று மாலை 7 மணிக்கு மாயூரம் நகர பூங்கா அருகே ஆர். ராமகிருஷ்ணன் தலைமையில் பேசுவோர்: மதுரை இளவரசன், கோவி.நாராயணசாமி, எல். அச்சுதன்,கந்தபெருமாள், எஸ். அன்பழகன், அன்புக் கண்ணன் மற்றும் பலர்.

### கலைக்குழு முகவரி

எஸ். சந்தான லட்சுமி கலைக்குழு
66, சிமிட்ரி ரோட்,
பழைய வண்ணை,
சென்னை-21.

# தோல்விக்கு மேல் தோல்வி அடையும் ஊழல் கருணாநிதி

### அமைச்சர் சவுந்தரராசன் தாக்கு

சென்னை, மே 22--தோல்விக்கு மேல் தோல்வி அடைவார் லஞ்ச நாயகன் கருணாநிதி என்று அமைச்சர் சவுந்தரராசன் கூறினர்.

சென்னை 20வது வட்டம் தம்புச் செட்டித்தெருவில் அருள் தலைமையில் நடைபெற்றகழகப்பொதுக் கூட்டத்தில் அமைச்சர் சவுந்தரராசன் கலந்துகொண்டு பேசினர். வட்ட அமைப்பாளர் எம். எஸ். மணிக்கு அமைச்சர் சவுந்தரராசன் சைக்கிள் வழங்கினர்.

கூட்டத்தில் அமைச்சர் சவுந்தரராசன், வை. பெருமாள், தஞ்சை தமிழழகன், சி.வி.அன்புத்தம்பி, மதுசூதனன், ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி, ந. ராமச்சந்திரன், கண்ணப்ப ராஜேந்திரன், எல். குமார், எம். எஸ். மணி ஆகியோர் பேசினர். அமைச்சர் சவுந்தரராசன் பேசும்போது கூறியதாவது:-

இங்கே வட்டஅமைப்பாளருக்கு சைக்கிளை தந்திருக்கிறோம். நம்மால் முடிந்தது சைக்கிள் தான். கழகப்பணிகளை விரைவாக செய்வதற்காக இந்த சைக்கிளைத் தருகிறோம்.

இதற்கு முன்பு ஆட்சியில் இருந்தவர்கள் தமது கட்சிக்காரர்களுக்கு கார்களைத் தந்திருக்கிறார்கள்.

### தேனீ போல..

மன்றத் தோழர்கள் தேனைச் சேகரிக்கும் தேனீ போல சிறுகச்சிறுக சேர்த்து இந்த சைக்கிளை வாங்கித் தந்திருக்கிறார்கள்.

மதிக்க வேண்டியவர்களை மதிக்கவேண்டிய நேரத்தில் நாம் மதிப்போம் என்பதற்கு வட்ட அமைப்பாளர் மணிக்கு சைக்கிள் வழங்குவது ஒரு உதாரணம்.

புறாவைத் துரத்தி வந்த பருந்துக்கு தனது சதையை அறுத்து தந்தான் சிபிச் சக்கரவர்த்தி அதற்காக புறா நன்றி சொல்லி முடியுமா?

அமைக்கப்பட்ட இந்த அரசு தந்தை பெரியாருக்கு பரிசாக தரப்பட்ட அரசு என்று அண்ணா சொன்னார்.

நான் அன்போடு சொல்லிக் கொள்கிறேன். இந்த அரசு தொண்டர்களுக்கு பரிசாகத் தரப்பட்ட அரசு, 'அரசை தொண்டர்கள் தான் நடத்துகிறார்கள்.

நீங்கள் புரட்சித் தலைவரோடு ஒன்றிவிட்டீர்கள். புரட்சித் தலைவர் உங்களோடு ஒன்றிவிட்டார்.

### கருத்துரை இழந்தவர்...

சோடாபாட்டில் வீசுவதும் கற்கள் வீசுவதும் கருணாநிதி கட்சியினருக்கு பழக்கமாகிவிட்டது.

கருத்துரைஇழந்தவர்கள்-சொல்லை இழந்தவர்கள் கற்களை நம்பிக்கொண்டிருக்கிறார்கள்.

தூங்குபவனை எழுப்பிவிடலாம், ஆனால் தூங்குபவனைப் போல பாசாங்கு செய்பவனை எழுப்ப முடியாது.

அதைத்தான் புரட்சித் தலைவர் நல்லபொழுதையெல்லாம் தூங்கிக்கெடுத்தவர்கள் நாட்டை கெடுத்ததுடன் தானும்கெட்டார் என்று சொல்லியிருக்கிறார்.

கருணாநிதியும் மற்றவர்களும் தூங்கி கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

அவர்களை நான் கேட்டுக் கொள்வதெல்லாம் கண்களைத் திறந்து பாருங்கள். பார்வையில் கோளாறு என்றால் நாங்கள் சிகிச்சையளிக்கிறோம்.

கண்ணைத் திருத்தலாம் கருத்தைதிருத்தமுடியாது. கருத்துக் குருடர்களாக மாறியிருக்கிறார்கள்.

1972ம் ஆண்டு அக்டோபர் 17ந் தேதி புரட்சித் தலைவரை விலக்கிய பின் வெற்றியும் கருணாநிதியை விட்டு விலகி விட்டது.

### தப்புக் கணக்கு

வாத்தியாரே இல்லாத பள்ளிக்கூடத்தை கருணாநிதி நடத்திக் கொண்டிருக்கிறார். வாத்தியாரே இல்லாததால் தான் கருணாநிதியின் கணக்கில் தவறு ஏற்பட்டு விட்டது. கருணாநிதிக்கு வந்ததெல்லாம் தப்பு கணக்கு தான்!

முதலில் கழகம் ஆரம்பிக்கப்பட்ட போது 6 மாதம் தான் கட்சி நடத்துவார் என்று கருணாநிதி கூறினர். அதுவும் பொய்த்து 6 ஆண்டுகளைத் தாண்டி 7 வது ஆண்டில் நடந்து கொண்டிருக்கிறோம். முதல் படியிலேயே தவறி விட்டார்.

இரண்டாவதாக திண்டுக்கல் இடைத்தேர்தலில் நாம் வெற்றி பெற்று விடலாம்; நாம் தானே ஆளும் கட்சி? மக்கள் நமக்குத்தான் வாக்களிப்பார்கள் என்று கருணாநிதி நினைத்தார். மக்கள் அதையும் பொய்யாக்கிவிட்டார்கள்.

மூன்றாவதாக கோவைத் தேர்தலில் மக்களிடம் சென்று கோவை எனக்குத் தா! பாவை நான் பாடுவேன் என்று கருணாநிதி சொன்னார். கோவையைத் தந்தால்

(2-ம் பக்கம் பார்க்க)

## சாராய வழக்கில் லட்சாதிபதி கைது

சென்னை, மே 22--எண்ணூர் வள்ளுவர் நகரைச் சேர்ந்த புத்திரியன் (வயது 40) இவர் லட்சாதிபதியாகும்.

இவர் ஏற்கனவே சாராய வழக்கில் போலீசாரால் தேடப்படுபவராகும்,

கூடூர் ரயிலில் சாராயம் வருவதாகபோலீசாருக்கு வந்த தகவலையொட்டி ரயிலைச் சோதனையிட்டனர். அதில் 700 லிட்டர் சாராயம் பிடிபட்டது. சோதனையின் போது சாராயம் கடத்தி வந்த அன்வர் என்பவர் கைது செய்யப்பட்டார்.

அன்வர் தந்த தகவலையொட்டி புத்திரியன் எங்கு இருக்கிறார் என்பதையறிந்து போலீசார் சென்று புத்திரியனைக் கைது செய்தனர்.







## பூட்டோ அடித்துக்கொல்லப்பட்டார்

லண்டன், மே22-பாகிஸ்தானின் முன்னாள் அதிபர் பூட்டோஅடித்துகொல்லப்பட்டார் என்ற திடுக்கிடும் தகவலை பாகிஸ்தான் முன்னாள் கவர்னர் தெரிவித்து இருக்கிறார்.

அரசியல்எதிரியைகொலை செய்ய தூண்டியதாக குற்றம் சாட்டப்பட்ட பூட்டோ கடந்த ஏப்ரல் மாதம் தூக்கில் போடப்பட்டார். பூட்டோவுக்கு தூக்குதண்டனை நிறைவேற்றப்பட்டதுபற்றியபுதிய தகவல்கள் வெளியாகி இருக்கின்றன.

பூட்டோவை சிறையில் சித்திரவதை செய்து கொன்றுவிட்டார்கள். அதன்பின் வெறும் பிணத்தைத்தான் தூக்கில் போட்டு இருக்கிறார்கள்.

பூட்டோவிடம் இருந்து ஒப்புதல் வாக்குமூலம் வாங்குவதற்காக சிப்பாய்கள்அவரைக்கொடுமைப் படுத்தினார்கள். அவர் உறுதியாக மறுத்து விட்டார். சித்திரவதை காரணமாக அவர் இறந்து விட்டார்.

அது வெளியே தெரியக் கூடாது என்று பூட்டோவின் உடலை தூக்கில் போடும்படி அதிபர் ஜியா உத்திரவிட்டு இருக்கிறார். அதன்படி தூக்கு தண்டனையை நிறைவேற்றியது போல நாடகம் ஆடினார்கள்.

போலியாக தூக்கு தண்டனையை நிறைவேற்றியதில் சம்பந்தப்பட்ட சில அதிகாரிகளிடம் இருந்து எனக்கு இந்த தகவல் கிடைத்துள்ளது.

இவ்வாறு பாகிஸ்தானின் முன்னாள் கவர்னர் முஸ்தபா கார் கூறி இருக்கிறார்.

முஸ்தபாவுக்கு 41 வயது ஆகிறது. இவர் பஞ்சாப் மாநில கவர்னராக முன்பு பணியாற்றியவர். அதிபர் ஜியாவிடமும் ஆலோசகராக பணியாற்றி இருக்கிறார்.

இவர் மீதும் ஊழல் வழக்கு தொடரப்பட்டதால் பாகிஸ்தானில் இருந்து தப்பி ஓடி- லண்டனில்குடியேறினார்.முஸ்தபா கார் இப்பொழுது லண்டனில் வசித்து வருகிறார்.